[16th March 1961

SRI M. K. SOMASUNDARAM : ஸார், மேஜைமேல் வைக்கப் பட்டுள்ள அறிக்கையில் செங்கல்பட்டு, நாகப்பட்டினம், கடலூர் போன்ற இடங்களில் மிகக் குறைவாக இருக்கிறதே. அதை உயர்த்துவதற்கு என்னென்ன நடவடிக்கைகள் எடுக்கப்பட்டிருக் கிறது ?

THE HON. SRI M. A. MANICKAVELU : எங்கெங்கே வசதி இருக்கிறதோ அங்கேயெல்லாம் பயிற்சி கொடுக்கப்பட்டு வருகிறது. 66, 59 என்றும் சில இடங்களில் இருக்கிறதே, அதை யும் கவனிக்கவேண்டும்.

*Renovation of temple (Utharakosamangai)*

* 873 *Q.*—SRI K. VINAYAKAM : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether there is any proposal to renovate the ancient temple at Utharakosamangai, Ramanathapuram district; and

(*b*) the age of the holy "Elanthai" tree in the temple?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes, Sir.

(*b*) Information is not available.

SRI K. VINAYAKAM : This famous temple has been praised even by Nayanars of the olden days and a very big congregation of Hindus come to the temple. In view of this, will the Government take steps to renovate the temple?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்த இலந்தை மரம் உள்ள ஆலயம் மிகப் பழமையானதுதான். இந்த ஆலயத்தைப் பற்றிக் கேட்டார்கள். என்னிடம் இப்போது தகவல் இல்லை. இருந்தாலும் வரலாறு கூறுகிறது இராவணனுக்கு முன்னே ஏற் பட்டது என்று. இந்த ஆலயத்திற்கு இந்த நாட்டிலே இருந்தும், இலங்கையிலே இருந்தும் பல யாத்திரிகர்கள் வருகிறார்கள். ஆகவே இது பழமைவாய்ந்த, ரொம்ப நாட்களாகத் திருப்பணி செய்யா மல் இருந்த கட்டிடம். இதற்குத் திருப்பணி செய்யவேண்டுமென்று ரொம்ப நாட்களாக முயற்சி நடந்துகொண்டிருக்கிறது. தேவஸ்தானம் சார்பாக 2,07,123 ரூபாய் 30 ந.பை. பாங்கில் போட் டிருக்கிறார்கள். அதேமாதிரி இந்தத் திருப்பணியை ஏற்றுக் கொண்டு நடத்த இருக்கும் செட்டியார்களும் 2 லட்சம் ரூபாய் அவர்களுடைய பங்காக போட இருக்கிறார்கள். சீக்கிரத்தில் இந்த வேலை எடுத்துக்கொள்ளப்படும். ஆனால் இதற்கு முன்னால் திருப்பணி வேலை நடந்துகொண்டிருக்கிறது.

SRI K. VINAYAKAM : சமீபத்திலே பெய்த பேய்மழையின் காரணமாக தண்ணீரானது கோவிலுக்குள்ளே புகுந்துவிட்டதால் ஒரு மாத காலத்திற்குமேல் பக்தர்கள் கோயிலுக்குள் போக முடியாதபடி ஒரு நிலைமை ஏற்பட்டது என்று சொல்லப்பட்டது. ஆகவே, உடனடியாக ரிப்பேர் செய்வதற்கு முயற்சி எடுத்துக் கொள்வார்களா ?

16th March 1961]

THE HON. SRI C. SUBRAMANIAM : இயற்கையாக மழை பெய்து, வெள்ளம் வந்தால் அதை எப்படித் தடுக்க முடியும்?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : விவரங்கள் எனக்குத் தெரியாது. எல்லாம் இறைவனுடைய திருவருள் ஆகும். கனம் நிதி அமைச்சர் அவர்கள் சொன்னதுபோல், இயற்கையைத் தடுக்க முடியாது. வெள்ளம் ஏற்பட்ட சமயத்திலும் மக்கள் கோவிலுக்குப் போய்க்கொண்டுதான் இருக்கிறார்கள்.

SRI S. M. ANNAMALAI : ஸார், இந்தக் கேள்வியிலே 'தெய்விக இலந்தை மரம்' என்று கூறப்பட்டுள்ளது. அப்படியானால், அதற்கு என்ன சக்தி இருக்கிறது? வேறு ஏதாவது மரங்களுக்கு இல்லாத சக்தி இந்த மரத்திற்கு இருக்கிறதா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் அங்கத்தினர் பல விஷயங்களை நன்கு படித்துத் தெரிந்து கொள்ளக்கூடியவர். ஆகவே, இதுபற்றியும் அவர் அம்மாதிரி தெரிந்து கொள்ளலாம். சில விருக்ஷங்கள் இருக்கின்றன. பார்த்தாலே அவைகளின் பழம்பெருமைகள் தெரியும். ஆழ்வார் திருநகரியிலே புளிய மரம், ஏகாம்பரநாதர் ஆலயத்திலுள்ள மாமரம் அதேபோல் இந்த இலந்தை மரமும் பழமையின் சின்னம். நான் முன்பே, இது இராவணன் காலத்திற்கு முந்தியது என்று சொன்னேன். இப்போதும் பழம் காய்க்கிறது, இதுதான் அதன் விசேஷம்.

*Catholic patients (Prayers)*

* 874 Q.—SRI T. T. DANIEL : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether the Catholic Priests are allowed to offer mass for the Catholic patients in the T.B. Hospital, Nagercoil;

(*b*) whether such an arrangement existed before 1st November 1956;

(*c*) if it is discontinued, what is the reason for it;

(*d*) whether there was a place in the hospital given for the Catholic patients to offer prayer; and

(*e*) if so, whether it is converted into a place of worship of non-Christians?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) No.

(*b*) Yes.

(*c*) It was discontinued with reference to the general instructions on this subject that are being followed in all the Government hospitals in the State.

(*d*) No.

(*e*) Does not arise.